VOL. LXXVIII. No. 7. JULY 1941.

# அருணோதயம்

# ARUNODAYAM

## THE
## TAMIL EVANGELICAL LUTHERAN JOURNAL

Published by the Church of Sweden Mission,
the Tamil Evang. Lutheran Church and the Danish Mission

நீங்கள் புறப்பட்டுப்போய்ச் சகல ஜாதிகளையும் சீஷராக்குங்கள்.
மத். 28 : 19.

பொருள் அட்டவணை. பக்கம்.



PRINTED AT
JEGAM & Co., DODSON PRESS,
TEPPAKULAM, TRICHY.

1941

**To the Arunodayam Subscribers** :—Most Indian friends in the Danish Mission have not paid their dues for 1940 and also for 1941. It will be an unnecessary expense to write to them individually by post. Nor have our friends in the T. E. L. C. paid off all their dues. Please expedite and send your M. O. at once.

பரம இளைப்பாறுதல்.

எனது அருமை மனைவியும், காலஞ்சென்ற கனம் N. முத்து சாமி ஐயரவர்களின் சிரேஷ்ட புத்திரியுமான ஞான செல்வம் தேவகிருபையம்மாள் சிலகாலங்களாக வியாதியாயிருந்து நாளது மாதம் 10-உ செவ்வாய்க்கிழமை மாலை 5-30 மணிக்கு, தான் வெகுகாலமாய் வாஞ்சித்திருந்த தன் பரம எஜமானின் இளைப் பாறுதலுக்குள் பிரவேசித்தது. இதனது சடலம், அடுத்தநாள் 11-உ சாயங்காலம் 4-30 மணிக்கு சங். S. தேவபிரசாதம் ஐயரவர்களால் "வானத்திலிருந்து ஒரு சத்தம் கேட்டேன். அது ஆண்டவருக்குள் சாகிற மரித்தோர் இதுமுதல் பாக்கியர் என்று எழுது" என்கிற பொருளின்பேரில் துக்கவீட்டில் ஆராதனை நடைபெற்று தஞ்சை லுத். மிசியோன் உத்தான தோட்டத்தில் சங். P. மாணிக்கம் ஐயரவர்களால், சகல கிறிஸ்தவ மரியாதைகளுடன் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது. அது மகிமையாய் எழுந்திருக்கும். வயது 45. துக்கத்தில் ஆழ்ந்த எங்களுக்காக அனுதாபப்பட்டு ஆறுதல் கடிதங்கள் எழுதின யாவருக்கும், இதன்மூலமாய் எங்கள் வந்தனத்தை தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

"நல்ல போராட்டத்தைப் போராடினேன். ஓட்டத்தை
முடித்தேன். விசுவாசத்தைக் காத்துக்கொண்டேன்.
நீதியினுடைய கிரீடம் எனக்கு வைத்திருக்கிறது.

2. தீமோ. 4, 7, 8.

Kamala Vilas,
TANJORE.
20—6—1941.

G. தேவசகாயம் பிள்ளை,
*Retd. Sub-Inspector of Police.*




தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் பத்திரிகை

Edited by Rev. S. GNANAMANICKAM, &
Mr. G. T. WILLIAMS, B. A., L. T.

| No. 7 | ஜூலை | 1941 |
|---|---|---|

## தியானம்

அக்கினியைப் பூமியின்மேல் போடவந்தேன்; அது இதற்குள் பற்றி எரிந்திருக்க எவ்வளவோ விரும்புகிறேன். லூக் : 12 : 49.

இயேசுவானவர் இவ்வுலகத்திற்குத் திரு அவதாரம் செய்த நோக்கத்தை இவ்வாக்கியத்தில் எடுத்துரைக்கிறார். அவர் அக்கினியைப் பூமியின்மேல் போடவந்தார். குளிர்ச்சியான இடத்தில் அனல் மூட்டும் தன்மை அக்கினிக்கு உண்டு. அன்பற்ற உள்ளங்களில் அன்பின் தீயை மூட்டி, பகை நிறைந்த உலகத்தை அன்புமயமாக்க இயேசுவானவர் பிரயாசப்பட்டார். பழிக்குப் பழி வாங்கும் போக்கை அகற்றிப் பொல்லாப்பை நன்மையினால் வெல்லும் முறையை ஏற்படுத்தி அப்பியாசித்தார் நம தாண்டவர். பிறர் குற்றங்களை மன்னிக்க மனமற்றவர்கள் முழு மனதோடும் மன்னிக்கும் தன்மையில் தேறுவதற்கு இயேசுவானவர் வழி திறந்தார். அக்கினிக்கு அழிக்கும் தன்மையுண்டு. எங்கே இயேசுவினால் அன்பின் தீ மூட்டப்படுமோ, அங்குள்ள துர்க்குணங்களாகிய, பொறாமை, கோபம், பகை, துவேஷம் முதலிய ஆபாசங்கள் நீங்கும்.

அக்கினிக்குப் பரவும் தன்மை உண்டு. ஒரு பொறி தீ ஒரு பெரிய காடு முழுவதிலும் பரவிப் பற்றி எரிவதை நாமறிவோம். இயேசுவினால் மூட்டப்பட்ட அன்பின் தீ ஒருவர் உள்

ளத்தில் அடைபட்டிருக்கமுடியாது. அது ஒருவரிடமிருந்து மற்றொருவரிடம் பரவிடும். இயேசுவின் அன்பை ருசித்த சமாரிய ஸ்திரீ மற்ற சமாரியரிடம் அதை அறிவிக்குமட்டும் இளைப்பாறமுடியாது. கிறிஸ்துவின் அன்பை அனுபவிக்கும் அடியார் அவ்வன்பைக் குறித்து மற்றவர்களிடம் சொல்லியே தீருவார்கள். ஒரு தொற்று வியாதி ஒரு வீட்டிலிருந்து அடுத்த வீட்டுக்குப் பரவுவதுபோல் கிறிஸ்துவினால் மூட்டப்பட்ட அன்பு பிறரைத் தாவிப் பிடித்துக்கொண்டே பரவிச் செல்லும். அப்போஸ்தலமார் சுவிசேஷப் பிரசாரத்தை ஓயாமல் செய்ய அவர்களை ஏவினது கிறிஸ்துவினால் மூட்டப்பட்ட அன்பல்லவோ? ஐரோப்பா கண்டத்திலிருந்து சீகன்பால்க், சுவார்ச்சு, வில்லியம்கேரி, முதலிய மிஷனேரிமார் நமது தேசத்திற்குச் சுவிசேஷத்தைக் கொண்டுவரத்தூண்டினது கிறிஸ்துவின் அன்பு தான். கிறிஸ்துவின் அன்பு எங்களை நெருக்குகிறது என்று பவுல் சொன்னவண்ணம் நம்மையும் நெருக்காவிட்டால் நாம் அவ்வன்பை சரியானபடி ருசிக்காதவர்களென்றே சொல்லவேண்டும். கஷ்டப்படுகிறவர்களுக்கு உதவி செய்யவும், கண்ணீர் விடுகிறவர்களை ஆற்றித் தேற்றவும், ஆதரவற்றவர்களுக்கு அனுதாபங் காட்டவும் இவ்வன்பு நம்மை ஏவிவிடும்.

ஓரிடத்திலே தீப்பற்றியெரியும்போது அதை அவிக்க ஜனங்கள் வெகுவாய்ப் பிரயாசப்படுவார்கள். தீ அதிகமாய்ப் பரவியிருந்தால் அதை அவிக்கமுடியாமல் தவிப்பார்கள். சாத்தானும் அவனால் ஏவப்பட்டவர்களும் இயேசுவால் மூட்டப்பட்ட அன்பின் அக்கினியை அவித்துவிட ஓயாமல் பிரயாசப்பட்டுக்கொண்டே வருகிறார்கள். ஆயினும் இந்நாள்வரையில் அவர்கள் பிரயாசம் சித்திபெறவில்லை. இயேசுவினடியார் இதற்கு மாறாகத் தாங்கள் செய்யவேண்டியதையெல்லாம் இன்னம் செய்து முடிக்கவில்லை.

'அது இதற்குள் பற்றி எரிந்திருக்க எவ்வளவோ விரும்புகிறேன்' என்னும் இயேசுவின் ஆசையைத் திருச்சபை எப்போதும் தன் மனக்கண்முன் வைத்து அதை நிறைவேற்றத் தங்களால் இயன்றமட்டும் பிரயாசப்படுவதவசியம். ஆரோனின் குமாரராகிய நாதாப், அபியூ என்றவர்கள் பரிசுத்த அக்கினிக்குப் பதிலாக அந்நிய அக்கினியை ஆண்டவருடைய சந்நிதியில் கொண்டுவந்தார்கள். அப்போது அக்கினி கர்த்தரின் சந்நிதியிலிருந்து புறப்பட்டு அவர்களைப் பட்சித்தது என்று வாசிக்கிறோம் (லேவியராகமம் 10 : 1, 2). திருச்சபை உலகமெங்கும் பரம்ப இயேசுவால் மூட்டப்பட்ட பரிசுத்த அன்பே நம்மை ஏவிவிடவேண்டும். இயேசுவுக்குத் தங்களை முற்றிலும்



பிரதிஷ்டை பண்ணுதவர்கள், உலக சாமர்த்தியத்தினாலும், தந்திரத்தினாலும், பொய்யினாலும், அவருடைய ராச்சியத்தைப் பரம்பச்செய்ய முயற்சி செய்யும்போது அவர்கள் தேவகோபாக்கினியிலே மடிந்து கெடுவார்கள். நாம் நம்மைத் தற்சோதனை செய்வோமாக. இயேசுவின் பரிசுத்த அன்பு நம்மை நிரப்பவும், சுத்திகரிக்கவும் இடங்கொடுப்போமாக. அப்போது அவருடைய ஆவியானவர் நம்மைத் தமது கருவிகளாக உபயோகித்து நமது அன்பினாலும் பலன் நிறைந்ததாகப் பரவி ஓடி உலகத்தை அன்பு மயமாக்கத் துணை செய்வார்.

———:———

## பத்திராதிபர் குறிப்புகள்

ஜூலை 9௳, மிசியோன் ஸ்தோத்திரப் பண்டிகை. அன்று சுவிசேஷப் பிரபல்லிய சங்கத்திற்கென்று விசேஷித்த காணிக்கை சேர்க்கப்படும். சுவிசேஷப் பிரபல்லிய ஊழியத்தில் நமது சபையார் யாவரும் ஊக்கமாய் ஈடுபட அன்று ஏவுதலடைவார்கள். சுவிசேஷத்தைப் புறமதஸ்தரிடம் பிரபல்லியம் செய்வதில் நிர்விசாரமாயிருக்கும் சபை தன் ஞான ஜீவனை இழக்கும் மோசத்திற்குள்ளிருக்கும் என்பது நிச்சயம்.

மதுரையில் நடைபெற்ற சினோட் கூட்டத்தின் நடபடிகளை சென்ற மாத அருணோதயத்தில் பிரசுரம் செய்தோம். அதில் 116ம் பக்கத்தின் 2ம் பாராவின் கடைசியில் அறுப்பின் ஸ்தோத்திரக் காணிக்கை, கோவில் வீட்டுவாடகையில் பாக்கி வைத்திருப்பவர்கள் சம்பந்தமாகச் செய்த தீர்மானம் சரியாய்த் தெரிவிக்கப்படவில்லையென்று பங்களூர் சபையாரிலொருவர் நமக்கு எழுதியிருக்கிறார். ஆதலால் நாம் ஆலோசனை சங்க காரியதரிசிக்கு எழுதி, அவர் அனுப்பிய தீர்மான நகலை இங்கு வெளியிடுகிறோம் :—

1. அறுப்பின் ஸ்தோத்திரப் பண்டிகை காணிக்கை பாக்கி: இனிமேல் பொதுவாய் அறுப்பின் ஸ்தோத்திரப்பண்டிகையின் ஏலம் ரொக்கத்திற்கே விடப்படவேண்டும். முந்தின வருஷ பாக்கியைத் தனிக் கணக்காய் வைத்து, குருவும் P. C. அவயவங்களும் கூடிய மட்டிலும் அவைகளை வசூல் செய்ய ஆழ்ந்த பிரயத்தனம் செய்யவேண்டும். ஆயினும் அறுப்பின் காணிக்கையில் பாக்கி வைத்திருப்போர் P. C. அவயவங்களாக முடியாது.

2. வீட்டுவாடகை பாக்கி: மூன்று மாசத்திற்குமேல் வாடகை பாக்கி வைத்திருப்போரெல்லாரும் வீடுகளைக் காலி

செய்யும்படி சபைச் சங்கத் தலைவர் ஏற்பாடு செய்யவேண்டும். 3 மாசத்திற்கும் அதற்கு அதிகமாகவும் வீட்டுவாடகை பாக்கி வைத்திருப்போர் P. C. அவயவங்களாக முடியாது. வாடகை வசூல் ஒழுங்காய் நடைபெறவும், வாடகை பாக்கி வைத்திருப்போர் விஷயத்தில் உடனே நடபடிக்கை எடுத்துக்கொள்ளவும் வட்ட சங்கத் தலைவர் கவனம் வைத்து மேல் விசாரணை செய்ய வேண்டும்.

**புத்தக மதிப்புரை :**

1. கிறிஸ்து பெருமான் வாழ்க்கை (J. Patterson Smith பண்டிதர் ஆங்கிலத்திலெழுதியது. கனம் ஆ. அருள்தங்கையா அவர்கள் மொழிபெயர்த்தது—C. L. S. Madras, விலை, ரூ. 1-4-0). 416 பக்கங்கள் கொண்டுள்ள இத்தமிழ் நூலில் கிறிஸ்துவின் ஜீவிய சரித்திரம் தொடர்ச்சியாய் மிகவும் நல்ல தமிழ் நடையில் அச்சியற்றப்பட்டுள்ளது. சுருங்கச் சொல்லில் இப்புத்தகம் கிறிஸ்தவ ஊழியரனைவருக்கும் அத்தியாவசியமானது. ஒழுங்காக வேதம் வாசிக்கும் கிறிஸ்தவர் ஒவ்வொருவரும் இந்நூலை வாசித்தால் எம்பெருமானின் ஜீவியத்தின் அதிசயத்தைத் தெளியக் கண்ணுறுவார்கள். ஆசிவார்த்தையின் அவதாரம், கன்னிப்பிறப்பு முதலிய தலைப்புகளில் வரைந்திருக்கும் விஷயங்கள் கிறிஸ்தவரனைவரும் அறியவேண்டியது, இவ்வரிய நூலின் மூலமாய் ஆண்டவரின் வெளிச்சம் தமிழ்த் திருச்சபையில் பிரகாசிக்கும் என்பது எம் நம்பிக்கை.

2. ஐக்கிய அரசும் அதன் சிதைவும் (Unification and Disruption of the Kingdom—C. L. S.—விலை அணு 6).—பழைய ஏற்பாட்டைப்பற்றிய அறிவும், பழைய ஏற்பாட்டு வாசிப்பும் குறைவுபடும் இக்காலத்துக்கு ஏற்ற நூலிது. சாமுவேலின் 2-ம் ஆகமம், 1, 2, இராசாக்களின் ஆகமங்களுக்கு ஒரு புதிய விஸ்தரிப்பு இதிலடங்கியது. 111 பக்கங்களுள்ளது. இந்நூலின் முதற்பாகத்தில் அக்கால சரித்திரம் இனிது வரையப்படுகிறது. 2-ம் பாகம் அதற்கு விஸ்தரிப்பு, 3-ம் பாகத்தில் அதன் ஆசிரியர், நூல்வரலாறு, நோக்கம் முதலியவைகளைக் குறிப்பிட்டிருக்கிறது. இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கும் கேள்விகள் மிகப் பிரயோஜனமானவை. முற்சொன்ன ஆ. அருள் தங்கையா அவர்களால் இனிய தமிழ் நடையில் எழுதப்பட்டது.

3. புதிய வெளிச்சம், (by W. M. Ryburn and E. L. King. Abridged by Miss V. K. Black C. L. S ) விலை அணு எட்டு. கிராமப் பாடசாலைகளுக்குரிய வேதபாடங்கள் அடங்கியுள்ள சிறந்த நூல் இது. 164 பக்கங்கள்கொண்டது. கிரா



மங்களை ஆட்டிவைக்கும் பேய்களாகிய "வியாதி, அவபக்தி, ஜாதி பேதங்கள் வறுமை, அறியாமை, வழக்குத் தொடர்தல்" முதலியவைகளைப் போக்குவதற்குப் பிள்ளைகளை சிறுவமுதலே வேத பாடங்களின் மூலமாய் பழக்குவதெப்படி என்பதைப் பற்றிய புதிய வெளிச்சம் நமக்கு இந்நூலின் மூலம் கிடைக்கின்றது. கிராம ஊழியரும், அவ்வூழியத்தின்மேல் சிரத்தையுள்ளோரும் இந்நூலை வாசித்து பயன்பெறுவார்கள்.

---

## 19ம் பொதுக்கூட்டத்திற்குச் சமர்ப்பிக்கப்பட்ட லூத்தரன் மிஷனெரி சங்கத்தின் மூவாண்டறிக்கை 1938—41

1916-ம் ஸு ஏப்ரல் மாதம், மத்திய மாகாணத்தில் உள்ள கட்னியை மத்திய ஸ்தாபனமாகக்கொண்டு சங். ஞானபரணம் ஐயர் தமது ஊழியத்தை ஆரம்பித்தனர். பின்னர் அவர் ஜார்சுகுதா வேலையில் உதவி செய்வதற்காக அனுப்பப்பட்டார், 1922-ம் வருஷத்திலிருந்து 1927-ம் வருஷத்திற்குள் ஜார்சுகுதா வட்டத்தில் 1300 ஆக இருந்த சபையின் தொகை 1800 ஆக பெருகிற்று. 1928-ஸு மே-மீ 1.200 கிறிஸ்தவர்களோடு கூடிய நம்முடைய வட்டத்தின் மூன்றில் இரண்டு பாகத்தை கோஸ்னர் சபைக்கு (Gossner Church) திருப்பிக்கொடுக்க முடிந்தது. பிற்பாடு மிகுந்துள்ள மூன்றில் ஒரு பாகத்திலிருந்த கிறிஸ்தவர்கள் (1928லிருந்து 39 வரை) தொகை 600லிருந்து 1000க்கு பெருகினது. இந்தப் பாகத்தையும் 1939-ம் வருஷம் ஜூலை மாதத்தில் கோஸ்னர் சபைக்குக் கொடுத்துவிட்டு நம் முழு கவனத்தையும் முர்வாஹி ஸ்தாபனத்தின் மூலமாய் ரீவா மாகாணத்தில் செலுத்தி வருகிறோம்.

1929ல் சங். ஞானபரணம் ஐயர் முர்வாஹியில் தங்கிக் கொண்டு, ரீவா மாகாணத்திற்குள் வேலை ஆரம்பித்தார். ரீவாவுக்குள் பல கிராமங்களுக்கும் செல்லுவதற்கு கட்னியைவிட முர்வாஹி என்ற ஊர் மிகவும் சௌகரியம் வாய்ந்தது. இப்படியாக அடிக்கடி ரீவாவுக்குள் சுற்றித்திரிந்து, அங்கேயுள்ள அநேக கிராமங்களுக்குச் சுவிசேஷத்தை அவர் பிரசங்கித்திருக்கிறார். இவ்விதமாக நேர்முக சுவிசேஷ வேலை அன்றியில், பரோர் சீயோனி முதலிய பள்ளிக்கூடங்கள் மூலமாகவும், வைத்திய வேலை (Medical work) மூலமாகவும் சுவிசேஷ வேலை நடைபெறுகிறது.

பள்ளிக்கூடங்கள்: பரோர் பள்ளிக்கூடமானது 1931ஸூ ஸ்தாபிக்கப்பட்டது. அங்கு முக்கிய கட்டடங்கள் 1936ஸூ முடிவுபெற்றது. தற்போது இப்பள்ளிக்கூடத்தில் 79 பையன்களும் 11 பெண்களுமிருக்கின்றனர்; சர்க்கார் உதவி ரூ. 224. வருஷமொன்றுக்குக் கிடைக்கிறது. சீயோனி பள்ளிக்கூடமானது 1935ஸூ ஆரம்பிக்கப்பட்டது. தற்போது அங்கே 79 பையன்கள் படிக்கின்றனர். இம்முழு மாகாணத்திலும் மூர்வாஹி பாகமே கல்வியறிவு மிகக் குறைவாயுள்ள பாகம். ஆகவே தற்கால நவீன முறையில் நடத்தப்படும் இவ்விரு பள்ளிக்கூடங்களையும் சர்க்காரும் மற்றைய பிரமுகர்களும் மேலானதாகக் கருதுகின்றனர். பரோர், சீயோனி என்னுமிருவிடங்களிலும் இரு ஹாஸ்டல்கள் இருக்கின்றன. பிரைமரி பரீட்சை முடித்துப் பையன்கள் தங்கள் கிராமங்களுக்குத் திரும்புகிறார்கள். நமது மிஷனரி அவர்கள் கிராமங்களில் அவர்களைத் தொடர்ந்து சந்தித்து வருகிறார். படிப்பிற் சிறந்து விளங்கிய சில பையன்கள் பெண்ட்ராவிலுள்ள சிஷ்ய மிஷன் (Disciples mission) பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப்பட்டு அதன் சம்பந்தமாய் நம் N. M. S. சங்கம் நடத்தும் ஹாஸ்டலில் தங்கிப் படிக்கின்றார்கள்.

வைத்திய ஊழியம்: 1939ஸூ அக்டோபரில் கனம் சார்ல்ஸ் டாக்டர் அவர்கள் இங்கே வைத்தியசாலையின் வேலையை ஒப்புக்கொண்டதிலிருந்து வைத்திய ஊழியமானது மிகவும் விசேஷித்த பிரகாரம் விருத்தியடைந்திருக்கிறது. 1940-ம் வருஷம் ஏறக்குறைய 11,000 பிணியாளிகள் இங்கே சிகிச்சை பெற்றிருக்கின்றனர். தவிர கனம் டாக்டர் அவர்கள் பக்கத்துக் கிராமங்களை அடிக்கடி கண்டு சந்திக்கிறார். ஒவ்வொரு நாளும் அவர் வீட்டில் இரண்டு மூன்று பிணியாளிகள் தங்கி (In-patients) சிகிச்சை பெறுகின்றார்கள். இப்படிப்பட்ட தங்கும் பிணியாளிகளுக்கு வார்டு (Ward) ஒன்றை சங். ஞானபரணம் ஐயர் தற்போது கட்டிக்கொண்டிருக்கிறார். ஒரு பெண் பாடசாலைக்கென்று ஏறக்குறைய ரூ. 300 கொடுத்த சில தெலுங்குப் பெண்மணிகள் அத்தொகையை ஆஸ்பத்திரி Ward கட்டடத்திற்கென்று அனுமதித்து இருக்கின்றனர். மூர்வாஹியைச் சுற்றி 25 மைலுக்கு யாதொரு வைத்திய சாதனத்திற்கும் வழி இல்லாததினால் இவ்விஷயத்திலும் நம்முடைய N. M. S. பிரதேசம் மிகவும் தேவை நிறைந்த பிரதேசமாகும்.

வரவு செலவு: 1938-ம் ஸூ. நம்முடைய வுத்தரன் கமிட்டி மூலமாய் தமிழ்ச் சபைகள் ரூ. 3800. கொடுத்தன. ஆனால் 1939-ம் ஸூ ரூ. 2,500 ஆகவும், 1940-ம் ஸூ யுத்த



கார்ணமாக ரூ. 1,700 ஆகவும் குறைந்தது. என்றாலும் அகில இந்திய வுத்தரன் பிடரேஷன் மகா தயாளமாய்க் கொடுத்த தொகையைக்கொண்டு 1940-ம் வருஷத்தைக் கடனின்றி முடிக்க ஏதுவாய் இருந்தது. இதுவிஷயமாய் நமது தமிழ்ச் சபைகள் அருமையாக நேசிக்கும் இவ்வேலையை முற்று முடிய ஆதரிப்பதற்காகத் தங்கள் ஜெபத்தோடுகூட தங்களின் தியாக நன்கொடைகளையும் உற்சாகமாய்க் கொடுத்துதவவேண்டுமென்று, N. M. S. கமிட்டியானது மிகவும் கரிசனையோடு விண்ணப்பிக்கின்றது: இப்படியே ஒவ்வொரு வுத்தரன் குடும்பமும் இவ்வேலையைத் தங்கள் தின ஜெபத்தில் நினைக்க வேண்டுமென்பதும் கமிட்டியின் கோரிக்கையாகும்.

பெருகிக் கொண்டேவரும் நமது ஊழியம்: சங் ஞானபரணம் ஐயரின் ஊழியத்தின் பயனாக சுவிசேஷ வேலைக்கு அநேக வழி வகைகள் ஏற்பட்டிருப்பதோடுகூட, ஆழ்ந்துழைக்கும் அநேக ஊழியர்களுக்கும் தேவை ஏற்பட்டிருக்கின்றது. இவ்வருஷம் மூன்றாவது மிஷனரி ஒருவர் ஏற்படுத்தப்படுவார். ஆந்திர கமிட்டியானது ஒருவரை இவ்வேலைக்கு ஏற்படுத்தப் பிரயாசை எடுக்கிறது. கூடிய சீக்கிரம் தமிழ் நாட்டிலிருந்து நாமும் இன்னொரு மிஷனரி அனுப்பவேண்டியிருக்கும்.

நம் தயாள போஷகர்கள்: N. M. S. ஐ நேசிக்கும் அநேகர் தமிழ் நாட்டில் இருக்கிறார்கள் என்பதற்காகக் கடவுளுக்குத் துதி யுண்டாவதாக. ரெங்கூன் போன்ற சில சேகரங்களும் ஸ்தாபனங்களும் மிகவும் உற்சாகத்தோடு மிகுந்த தொகை சேகரித்துக்கொடுத்திருக்கின்றன. ஒவ்வொரு சபையிலும், மற்றும் ஆங்காங்கு பல்வேறு இடங்களில் வசிக்கும் தனி ஆட்களும் ஒழுங்காய்த் தாங்கள் செய்யும் பண உதவியினால் இவ்வேலையை ஆதரித்து வந்திருக்கிறார்கள். வருஷத்திற்கு N. M. S. க்கு ரூ. 6-0-0 காணிக்கை கொடுப்பவர்களுக்கு N. M. S. ஆபீஸிருந்து விலையில்லாமல் ஒரு ஆங்கில சஞ்சிகையும், ரூ. 3-0-0 கொடுப்பவர்களுக்கு ஒரு N. M. S. தமிழ் தீபிகையும் அனுப்பப்படும். நம்முடைய பாஸ்டரேட்டுகளுக்கு வெளியே இருக்கும் அவயவங்களும், குருமாரும், தாம்பரத்தில் இருக்கும் கனம் J. D. ஆசீர்வாதம் அவர்களுக்கு எழுதி ஷை சஞ்சிகைகளைப் பெற்றுக்கொள்ளலாம்.

இப்பொழுது ஏற்பட்டிருக்கக்கூடிய பண நெருக்கடியிலும் நம் வேலை நடந்தேறும்படியும், ஆம்! பலவகையிலும் வளரும்படியும் உதவி செய்த கடவுளுக்குத் துதி! அவருக்கே ஸ்தோத்திரம்!!

புதுக்கோட்டை, 14-4-41.

M. தேவசகாயம்,
த. சு. லு. சபையின் N. M. S.
கமிட்டியின் கன்வீனர்.

மேமீ 30உ நமது ஊத்தரன் N. M. S. கமிட்டி தாம்பரத்தில் கூடிற்று. அப்போது கனம் கிருபாதானம் ஐயரும் நமது தமிழ் கமிட்டியில் நான்கு அவயவங்களும் டேனிஷ் அவயமும் வந்திருந்தார்கள். கனம் B. J. கிருபாதானம் ஐயர் B.A., B.D., நமது மூன்ரும் மிஷனரியாக நியமிக்கப்பட்டிருக்கிருர். ஜூலைமீ 1ம் தேதியிலிருந்து அவரும் அவர் மனைவியும் மார்வாகிக்கு 23 மைலுக்கப்பாலுள்ள பென்ராவில் தங்கள் மூன்று பிள்ளைகளோடு தங்கி ஊழிந்தி படித்துவருவார்கள்.

நமது சங்கத்தின் 25ம் வருஷ ஜூபிலி செப்டம்பர்மீ Federation Youth Conference சம்பந்தமாயும், அக்டோபர்மீ 12உ N. M. S. ஞாயிறு சம்பந்தமாய் எல்லா ஊத்தரன் சபைகளிலும் நடைபெறும். அந்த ஜூபிலி சம்பந்தமாய் கனம் ஞானபரணம் ஐயரும் அம்மாளும் நமது தமிழ், தெலுங்கு சபைகளைச் சந்திக்கக் கமிட்டியார் ஒழுங்கு செய்து வருகிருர்கள். ஆண்டவருடைய ஆவி வல்லமையாய் மார்வாகியிலும் ரீவாவிலும் கிரியைசெய்ய உக்கிரமாயும் முழு விசுவாசத்தோடும் நமது குடும்பங்களும் சபைகளும் தனியாட்களும் ஜெபிக்கக் கோருகிறோம்.

கிருபாலயம்
தாம்பரம்,
19—6—1941.

J. D. ஆசீர்வாதம்,
சர்வ இந்திய லுத்தரன் N.M.S. கமிற்றியின் தலைவர்.

———:———

## தினசரி வேத வாசிப்பும் தியானமும்

கிறிஸ்த சிஷ்ய சங்கக் கமிட்டியாரின் விருப்பத்திற்கிணங்கி இக்குறிப்புகள் தயாரிக்கப்பட்டிருக்கின்றன. 3வருஷத்துக்குள் முழுவேதாகமத்தையும் தியானத்தோடு வாசித்து முடிக்க இவ் வேர்பாடு உதவும். குறிக்கப்பட்ட வேதபாகத்தை வாசித்து முடித்ததும், அப்பாகத்தின்பேரில் கொடுக்கப்பட்டிருக்கும் குறிப்பைச் சற்று ஆழ்ந்து தியானித்து, ஜபிப்பது மிகப் பிரயோஜனமாயிருக்கும்.

A. J. SATYANADHAN,
கிறிஸ்த சிஷ்ய சங்கம்.

குறிப்பு: வ=வசனம்.

| 1941 தேதி | வேதபாகம் ஆதியாகமம். | தியானக் குறிப்பு. |
|---|---|---|

ஜூலை:

7 1:1—2·4 மனிதனைச் சிருஷ்டிக்கும் வரை தேவன் ஓய்வு பெறவில்லை; அவனைப் புதுச் சிருஷ்டியாக்கும் வரை அவருக்கு ஓய்வு (சமாதானம்) இருக்குமோ?



8 2:5—2·25 குடியிருக்க ஏதேனையும் அநுபவிக்க ஜீவராசிகளையும், துணைக்கு மனைவியையும் ஆதாமுக்குக்கொடுத்த தேவன் நமது தேவைகளையும் அறிவார்.

9 3 தந்திரப் பிசாசின் வலை எங்கும் வீசப்பட்டிருக்கும், அதனின்று நம்மை மீட்கும் கிருபை வல்லமையுள்ளது (வ. 15).

10 4 ஆபேலின் இரத்தத்துக்குச் செவி சாய்த்த தேவனுக்கு (வ. 10) அவருடைய பிள்ளைகளின் கூப்பிடுதல்கள் தூரமல்ல.

11 5 சாபம் புகுந்த உலகில் கர்த்தர் அளிக்கும் சுதந்தரம் பெற்றோரைத் தேற்றும் பிள்ளைகள்—என்னால் என் பெற்றோருக்கு ஆறுதல் உண்டா? (வ. 29).

12 6 கெடுக்கப்பட்ட பூமியை (வ. 12) பரிசுத்தப்படுத்த நோவாவைத் தெரிந்துகொண்ட தேவன், இக்கால உலகத்தைச் சீர்படுத்த என்னைத் தெரிந்துகொண்டிருக்கிறாரா?

13 7 கர்த்தர் கண்டுபிடிக்கப்படுகையில் அவரைத் தேடு; அவர் சமீபமாயிருக்கையில், அவரை நோக்கிக் கூப்பிடு (எசா. 55·6) தாமதியாதே.

14 8 நமது தேவன் நித்தியகாலமாக வழக்காடார்; என்றென்றைக்கும் கோபம் வையார். அவர் கிருபையே நமது நம்பிக்கை.

15 9 நீதிமான்களின் குடும்பம் தேவாசீர்வாதம் நிறைந்தது (வ. 1, 26, 27.)

16 10 குடும்பங்கள் பெருகுவது ஆசீர்வாதமும், அவைகள் தேவனைவிட்டுப் பிரிவது சாபமுமே. தேவ ஐக்கியத்தில் நானும் என் குடும்பத்தாரும் கட்டப்பட்டிருக்கிறோமா?

17 11 உயர்வாய் எழும்பும் பாபேல்கோபுரம் பிரிவினையை உண்டாக்கும்; இறங்கிவரும் பரிசுத்த ஆவியோ சிஷரைக் கிறிஸ்துவில் ஒருமைப்படுத்தும் (அப். 2·42; கொலொ 3·11)

18 12 தேவ நடத்துதலுக்குத் தம்மை ஒப்புவிப்போரும் கூட (வ. 4) மனுஷ பலவீனத்திற்குட்படக்கூடும் (வ. 13) ஆகையால் மார்க்கு 14 : 38 இல் இயேசுவின் புத்தியைக் கவனி.

19 13 ஆண்டவர், தம்மால் நடத்தப்படுவோருக்கு, ஆசீர்வாத வாக்குத்தத்தத்தோடு இடத்தைக் காண்பிப்பார் (வ. 14-16). நாமே தெரிந்துகொள்ளும் இடம் உலக

சம்பத்துடையதாயினும் (வ. 10) ஆசீர்வாதமற்றிருக்கும் (வ. 13).

20 14 தேவ நடத்துதல் பெற்ற நீ, அவபக்தரின் கண்ணியினின்று உன் சகோதரனின் ஆத்துமாவை மீட்கும் போது (வ. 16) கர்த்தரின் ஆசீர்வாதம் உன்னைத் தேடி வரும் (வ. 19).

21 15 தேவனால் நடத்தப்படும் பிள்ளை சோர்வுறும்போது (வ. 2) ஆண்டவரின் வாக்குத்தத்தங்களில் (வ. 5, 21) அவன் நம்பிக்கை வைக்கவேண்டியது அவசியம்.

22 16 தேவ நடத்துதலை மறந்து தேவ வாக்கு நிறைவேறும் வரை காத்திராமல், மாம்ச எண்ணங்களுக்குச் செவி சாய்ப்போனின் (வ. 2) நிலைமை பரிதாபமானதே.

23 17 தேவ நடத்துதலுக்குட்பட்ட நான் தேவனோடு பூரணமாய் ஐக்கியப்படுவதற்காக என்னைவிட்டு அகற்ற வேண்டிய பாவக்கூர் (நுனித்தோல்) எது?

24 18·1—15 தேவ நடத்துதலுக்கு ஒப்புவித்த என்னைத் தமது சிநேகிதனாக (எசா. 41·8; யாக். 2·23) மதித்து என்னிடம் வரும ஆண்டவரை நான் எப்படி ஏற்றுக் கொள்ளுகிறேன்? (வ. 3) அவரது வார்த்தையை எப்படி மதிக்கிறேன்? (வ. 12).

25 18·16-33 நியாயத் தீர்ப்பைப் பார்க்க இரக்கத்தையே காட்ட விரும்பும் என் ஆண்டவரிடம் எந்த சகோதரனுக்காக இன்று மன்றாடுவேன்? (வ. 32).

26 19 என் இருப்பிடம் பரிசுத்தமாயிருக்கிறதா? (வ. 15) என் இருதயம் பரிசுத்தமாயிருக்கிறதா? (வ. 32) [எசேக். 5·11 உம் 1 கொரி. 3·16 உம் ஒத்துப்பார்.]

27 20·1—18 நான் தேவ நடத்துதலைத் தினமும் எதிர்
21·22-34 பார்க்கவேண்டியவன்; என் பாதுகாப்புக்கு என் வழிகள் (20. 2,11) அல்ல, தேவ ஒத்தாசையே 20 7; 21·22) சிறந்த துணை.

28 21·1—21 தேவ வாக்குத் தத்தம் அவரால் நடத்தப்படுவோருக்குத் தகுந்த காலத்தில் நிறைவேறும் (வ. 2,12).

29 22 நீ இன்னும் எதைத் தத்தம் செய்ய மனமற்றிருக்கிறாய்? உன்னை நடத்தும் ஆண்டவருக்கு அதை ஒப்புவி; அவர் அதைப் புனிதப்படுத்தி உனக்குப் பூரண ஆசீர்வாதமாக்குவார் (வ. 16-18).

30 23 சரீரத்தில் குடியிருக்குமட்டும் நாம் பரதேசிகளே (வ. 4; 2 கொரி. 5 6). ஆனால் நித்திய வீட்டுக்கு நடத்தும் ஆண்டவரின் கை நம்மைவிட்டு விலகாது என்பது நம் ஆறுதல்.



31 24 ஜபமும் ஜப நேரமும் தேவ நடத்துலை நீ காணக்கூடிய நேரங்கள் (வ. 14, 15, 63). அவற்றை நீ அசட்டை செய்கிறாயோ?

ஆகஸ்டு:

1 25 நீதிமானின் கூடாரத்திலிருப்பவனே ஆசீர்வாதம் பெறத்தக்கவன்; கவலையற்றுத் திரிபவனோ அதற்கருகனல்ல (வ. 27, 34). என் சகவாசம் எங்கே?

2 26 என்ன தீங்கு நேர்ந்தாலும் (வ. 16) விசுவாசத்தை விடாதே (வ. 24,25). கர்த்தரின் கரத்தை (வல்லமையை) உன் பகைவரும் உணரும் நாள் வரும் (வ. 27, 28).

3 27 ஒரு காலத்தில் தேவ ஆசீர்வாதத்தை அலக்ஷியம் செய்தவன் மற்றெக்காலத்திலும் அதை ஆசித்துப் பெற்றுக்கொள்வது எவ்வளவு அரிது! (எபி. 12, 17).

4 28 துன்புற்று என் ஜீவன் தப்ப ஓடவேண்டியிருந்தாலும், நான் என் ஆண்டவரின் கரிசனைக்குள்ளானவன் என்பதே என் ஆறுதல்.

5 29 தன் சாமர்த்தியத்தில் சாருவதைவிட்டு தேவ ஒத்தாசையைக் கடைப்பிடிக்க யாக்கோபுக்கு 21 வருஷமாயிற்று (வ. 20, 27, 30) நீ இன்னும் உன் சுயபுத்தி பெலத்தையே சார்ந்திருக்கிறாயா?

6 30 மற்றவர்களுக்கு ஆசீர்வாதமாக ஆண்டவர் என்னை உபயோகிக்கும்படி (வ. 27) அவருடைய பிரசன்னத்தை நான் உணர்ந்திருக்கிறேனா? (ஆதி. 28, 17).

———:———

## திருச்சபை வர்த்தமானம்

### கிராம சேவை

மேமீ 6௳ முதல் 21௳ வரை, உசிலம்பட்டியிலிருந்து நான்கு வாலிபர்கள் கனம் R. D. சாமுவேல் அவர்களின் தலைமையின்கீழ் கிராம சேவைக்காக செவ்வாய்க்கிழமை மேமீ 6௳ பிரயாணமானோம். எங்களின் இலக்கான கிராமம், பேரையூர் வட்டத்தைச்சேர்ந்த ஆயர்தருமம் என்பதே. இது ஸ்ரீவில்லிபுத்தூர் தாலூக்காவில், பேரையூருக்கு தென்கிழக்கே 8 மைல் தூரத்தில் உள்ளது.

கிராமங்களின் குறைவுகளை நன்றாய் அறிந்துகொள்வதும், கிராமத்தாருடன் சில நாட்கள் வசிப்பதும், அறிவில் குறை வுள்ள மக்களையும், ஆத்தும பசியற்ற நமது சபையாரையும் சந்திப் பதும், அவர்களின் குறைபாடுகளை சுட்டிக் காண்பித்து, நமது ரக்ஷகரின் நாமம் மகிமைப்படும்படி உழைப்பதுமே எங்கள் சேவையின் முக்கிய நோக்கமாயிருந்தது. நமது கிராமங்களின் நிலைமை எல்லா விதத்திலும் கண்ணீர்விடக்கூடியதாயிருக்கிறது. நமது கிராம திருச்சபைகள் உயிரிழந்து கிடக்கின்றன. இந் நிலையில் உயர்ந்த கல்வியும், பரந்த நோக்கங்களும், தியாக சிந்தையும் உடைய வாலிபர்களை நாம் கிராமங்களுக்கு அனுப்பா விடில் நமது குக்கிராம வாசிகள் புத்துயிர்பெறுவது எங்ஙனம்?

பகல் காலங்களில் கிராமத்தாருடன் பழகுதல், தனித்து அவர்களிடம் சம்பாஷித்தல், பிள்ளைகளைக் குளிப்பாட்டல், தெருக்களை சுத்தம் செய்தல் முதலியவைகளில் ஈடுபட்டோம். மாலை வேளைகளில் பொதுக்கூட்டங்கள் கூட்டி, கிராம சுகா தாரம், கல்வி, கைத்தொழில், மூடப்பழக்கவழக்கங்கள் முதலி யவைகளைப்பற்றி கிராமவாசிகளோடு பேசினோம். நமது ரக்ஷ கரின் ஜீவிய சரிதையை ஒளிச் சித்திரத்தின் மூலம் விளக்கிக் காட்டினோம். சில கிராமங்களில் சுவிசேஷப் பிரதிகளும், மற்ற சன்மார்க்க பிரதிகளும் சொற்ப தொகைக்கு விற்றோம். கொடிய நோய்வாய்ப்பட்டுள்ளவர்களுக்கு, அவைகளை குணப்படுத்தும் வகைகளை காண்பித்தோம். இப்படியாக நாங்கள் சென்ற கிரா மங்களில் ஜனங்கள் எங்களை அன்புடன் ஏற்றுக்கொண்டு, எங் களின் வேண்டுகோளுக்கும் இசைந்து ஒத்துழைத்தார்கள்.

அ. தாவீது, 25-5-41.

———:———

## கொண்டஞ்சேரி குருசேகர சுவிசேஷ படை முயற்சி

சபைகுரு சங்கை C. G. Diehl ஐயர் அவர்கள் உத்தரவி படி கனம் T. S. ஆசிர்வாதம் பிரசங்கியாரின்கீழ் இக்குருசேக ரத்தில் ஓரத்தூர் டிவிஷனைச் சுற்றியுள்ள கிராமங்களில் மேமீ 23உ முதல் 25உ வரையில் சுவிசேஷ வேலை ஷெ குருசேகர ஊழியர்கள் சபை வாலிபர்கள் முதலானவர்களால் நடை பெற்றது.

23உ வெள்ளிக்கிழமை 10 மணிக்கு ஓரத்தூர் 'சீகேம்' ஆலயத்தில் உபாத்திமார்களும் சபை வாலிபர்களுமாக 20 பேர் களுக்கு அதிகமாகக் கூடிவர பிரசங்கியார் சுவிசேஷ வேலைக்கு ஆயத்தமாக வாக். 11, 30 ஆதாரமாகக்கொண்டு ஆத்துமாக் களை ஆதாயப்படுத்துவதற்கு வேண்டிய குணப்படுதல், அன்பு,



நம்பிக்கை முதலிய இன்றியமையாத குணங்களைப்பற்றிப் பேசி ஜெபித்து எல்லாரையும் சுவிசேஷ ஊழியத்திற்கு ஆயத்தப் படுத்தினார். பிற்பகல், 2 மணிக்கு கனம் D. P. அம்புரோஸ் அவர்கள் 'பள்ளிக்கூடங்களில் சுவிசேஷ வேலை' என்பதைப் பற்றி பேசி, உபாத்திமார் எவ்வெவ்விதங்களில், பிள்ளைகளின் மத்தியில் கிறிஸ்துவின் சாக்ஷியாய் விளங்கலாம் என்று எடுத் துக் காட்டினார். பிறகு D. P. அம்புரோஸ், பிரசங்கியார் ஆகிய இவர்கள் தலைமையின்கீழ் இருபகுதிகளாகப் பிரிந்து சுற்றியுள்ள கிராமங்களில் ஆண்டவரைப்பற்றிய சத்தியத்தை அறிவித் தோம். இதனால் சில இந்துக்கள் நல் மேய்ப்பரின் மந்தையில் சேர ஏவப்பட்டிருக்கிறார்கள். இரக்ஷகர்புரம் என்னும் கிரா மத்தில், ரோமன் கத்தோலிக் சபையைச்சேர்ந்த இரு அங்கத் தினர்கள் நமது சபையில் சேர்ந்துகொண்டார்கள், கிறிஸ்தவர் களும் எழுப்புதலடைந்தார்கள்.

24உ காலை 6 மணிக்கு அப். 8, 26—40ஐ தனித் தியானம் செய்து அதில் அவரவர்கள் அறிந்த விஷயங்களை ஒன்றுகூடிப் பேசினோம். பிறகு 7 மணிக்குமேல் கனம் P. அந்திரேயா உபாத்தியாயரால் அப். 10, 39—45ஐ ஆதாரமாகக்கொண்டு 'உயிரோடெழுந்த கிறிஸ்துவுக்கு நாங்கள் சாக்ஷிகள்' என்ற பொருளின்பேரில் கிறிஸ்தவன் கிறிஸ்துவுக்கு சாக்ஷி பகர 1. மனமாறவேண்டும், 2. பரி. ஆவியைப் பெறவேண்டும், 3. பரிசுத்த ஜீவியம் செய்து காட்டவேண்டும், என்ற விஷயங் களைத் தியானித்து காலை ஜெபம் முடிவுற்றது. பின்னர் 9 மணி க்கு வேத ஆராய்ச்சி, சுவிசேஷ வேலைக்கு வேண்டிய அனுபவ அறிக்கை, தேவாராதனைக்கு வேண்டிய இலக்ஷணங்கள், பாட சாலை பிள்ளைகள் கிறிஸ்துவை அறிந்துகொள்ளுமாறு போதித் தல் முதலான விஷயங்கள் விளக்கிக் காட்டப்பட்டன.

25உ ஞாயிறு ரக்ஷகர்புரம் கிராமத்தில் ஒரு விசேஷித்த ஆராதனை நடைபெற்றது. அச்சமயம் ரோமன் சபையைச் சேர்ந்த 16 ஆத்துமாக்களுக்கும், நமது சபை வாலிப கன்னி கைகள் உட்பட 4 ஆத்துமாக்களுக்கும் ஏற்கனவே ஞானோப தேசங்கள் பயிற்றுவிக்கப்பட்டு சங். K. சாமுவேல் ஐயர் அவர் களால் ஏற்றுக்கொள்ளுதல், ஞானஸ்நானம், திடப்படுத்தல், பரி. நற்கருணை முதலிய திருச்செய்கைகள் ஒழுங்காகவும், சிறப் பாகவும் நிறைவேறின. பிறகு 2 மணிக்குமேல் ஓரத்தூர் ஆல யத்தில் தேவாராதனை நடக்க 4 மணிக்கு கூட்டம் முடிவுற்றது.

இச்சேகரத்தில் அணைக்கட்டாபுத்தூர் என்னும கிராமத் தில் சாது C. ஆதாம் பால் என்பவரின் விசேஷித்த முயற்சி யால் மேமீ 28ம் 29ம் தேதிகளில் கிறிஸ்தவ மகா நாடொன்று

கூட்டப்பட்டது. இக்கூட்டத்திற்குப் பாண்ரேர் வட்டத்தி லுள்ள ஊழியர்களும், சபை மூப்பர், சபையாரும், அரக்கோணம் C. S. M. ஊழியர்கள் சபையார்களும் பற்பல இடங்களிலிருந்து வந்த மற்ற பலருமாகச் சேர்ந்து சுமார் 200 பேர்களுக்கதிக மாக வந்திருந்தனர். 28உ புதன்கிழமை மாலை 5 மணிக்கு இவ்வட்டத் தலைவர் சங். K. சாமுவேல் ஐயர் அவர்கள் தலைமை வகித்து II இராஜா: 23, 1-6 வசனங்களின்பேரில் பிரசங்கித்து ஜெபிக்கக் கூட்டம் ஆரம்பமானது. பின்பு பாண்ரேர் உயர்தர ஆரம்ப பாடசாலை தலைமை ஆசிரியர் ஸ்ரீமான் D. யாக்கோபு அவர்கள் லாசருவின் 'உயிர்த்தெழுதல்' என்ற சரிதையின் பேரில் நவீன சங்கீத முறையில் ஒரு கதா பிரசங்கம் செய்தார்.

சேகர உபா: J. இராயப்பன் அவர்களின் முயற்சியால் பயிற்சிபெற்றிருந்த, உள்ளூர் பஜனைப் பிள்ளைகளால் "கிறிஸ்தியான் மோக்ஷப் பிரயாணம்" என்னும் நாடகம் இருதின இரவுகளிலும் அதிவிமரிசையுடன் நடிக்கப்பட்டது.

மறுநாள் மகாநாட்டில் 1. சாக்ஷி பகருதல், 2. ஆத்தும அப்பியாசம், 3. கிறிஸ்துவின ஜீவிய சாக்ஷி, 4. ஆத்துமாக் களின் ஆதாய முக்கியம், 5. கடைசிக்கால எச்சரிப்பு முதலிய விசேஷங்கள் அழைக்கப்பட்ட சில பெரியோர்களால் பேசப் பட்டன. இரவு 9—7 மணிக்கு ஸ்ரீமான் பென்னியமீன் உபா: அவர்களால் 'யோனு' சரிதையின்பேரில் ஓர் இனிமையான கதா பிரசங்கம் செய்யப்பட்டது.

இத்தகைய கூட்டங்கள் அநேக ஆத்துமாக்கள் இயேசு பெருமானின் இரக்ஷண்ய அருளைப்பெறவும், அவர் வெளிச் சத்தினுல் அனல் மூண்டு ஜீவிய மாறுதல் அடையவும் ஏதுவா யிருந்தது. இக்காலத்தில் ஆண்டவர் தாமே இப்படிப்பட்ட எழுப்புதல் கூட்டங்களை நடத்தும்படித் தம்முடைய தாசர்களை ஏவி ஆசீர்வதிப்பாராக. ஆமேன்.

ஓரத்தூர். P. ANDREW

———:———

அம்மாபட்டி: சில மாதங்களாக இக்கிராமத்துப் பிள்ளை களைத் திடப்படுத்தலுக்காக திருவாளர் T. P. அகுஸ்தீன் உபதேசியார் ஆயத்தம் செய்துவந்தனர். மேமீ விடுமுறை நாட்களில் அப்பிள்ளைகள் 10 நாட்களாக பகலிலும் இரவிலும் கனம் எஸ். சாலமோன் ஐயர் அவர்களால் தெளிவாக ஞான உபதேசம் போதிக்கப்பட்டு 1—6—41ல் பரிசுத்த ஆவியின் பண்டிகை அன்று 8 ஆண்களும் 9 பெண்களும் திடப்படுத்தப் பட்டு திரு ராப்போஜனம் பரிமாறல்பெற்றது. இப்பயிற்சியி



னுல் சபை ஞான வளர்ச்சி குன்றிப்போகாமல் ஞான ஜீவனில் அதிகப்படும் என்பதை அனுபவத்தில் கண்டறிகிறோம். இக் காரியம் கிராம சபைக்கு எழுப்புதலையும் உற்சாகத்தையும் கொடுத்துவந்தது.

அம்மாபட்டி, 1-6-41. S. PONNIAH, *Teacher.*

———:———

# DANISH MISSION

Editor: REV. GNA. VEDAKAN, CUDDALORE N. T.

## செய்திகள்

**Late Rev. Francis Kingsbury:** நமது சபைகளில் நன்கு அறியப்பட்ட கனம் கிங்ஸ்பரி போதகர் ஏப்ரல்மீ 12உ கொழும் பில் மரித்துப்போனுர். இவருடைய சடலம் தகனம் செய்யப் பட்டது, இவர் ஒரு சைவ குடும்பத்தில் 1874ஆ ஆகஸ்டுமீ 8உ பிறந்து, சென்னை கிறிஸ்தவ கல்லூரியில் பயில்கையில், டாக்டர் வில்லியம் மில்லர் பண்டிதரால் போதிக்கப்பட்டு கிறிஸ் துவை ஏற்றுக்கொண்டு, பின்னுல் குருப்பட்டம் பெற்றனர். மதுரை சபையில் போதகராகவும் ஆசிரியராகவும், பங்களூர் ஐக்கிய வேத கலாசாலையில் தமிழாசிரியராகவும், கடந்த பெரிய யுத்தத்தில் பஸ்ராவில் ராணுவ குருவாகவும் பணிவிடைசெய்து, தமிழ் வித்வானுயிருந்தபடியால் லங்கை சர்வ கலாசாலையின் தமிழ் பண்டித சிரேஷ்டராகவும் அமர்ந்திருந்தனர். இவர் கிறிஸ்தவ கொள்கைகளை சொல்லப்பட்டபடியே விசுவாசியா மல், எதையும் சீர்தூக்கி ஆராய்ச்சிசெய்து தன் புத்திக்கு விளங்கினதை மாத்திரம் ஏற்றுக்கொண்டனர். கிறிஸ்து மனித அவதாரம் எடுக்குமுன் அவர் சதா காலமாய் ஜீவித்தவர் அல்ல வென்றும், அற்புதமாய் அவர் பிறக்கவில்லையென்றும், அவர் மரித்துப்போனபின் உயிர்த்தெழவில்லையென்றும் சாதித்து, இயேசுகிறிஸ்துதான் சாக்ஷாத் கடவுள் என்பதை ஏற்றுக் கொள்ள மறுத்தனர். இவர் ஒரு ஞானி: இந்திய மதங்களை நன்கு கற்றறிந்தவர்: தமிழ் வித்வான்: தாழ்மையும் நேர்மை யும், தயாளமும் உபகார சிந்தையும் நிறைந்த குணசீலர். கிறிஸ் தவ தமிழ் வீரர்களில் இவரும் ஒருவராக இடம் பெறுவர்.

* * * *

பட்டாம்பாக்கம் போர்டிங் மானேஜர் மிஸ். M. A. பீடர் ஸன் அம்மாளின் தாயார் டென்மார்க் தேசத்தில் நித்திரையாகி

னர். தங்கள் சுயதேசத்தையும் தங்களுக்கு அருமையானவர்களையும் விட்டுப்பிரியும் கஷ்டமான அநுபவம் மிஷனெரிமாருக்குக் கடுமையானதே. ஒரு தாய் உலகில் கடவுளால் அளிக்கப்படும் ஒரு நல்ல ஈவு. இந்த ஈவு உலகிலிருந்து எடுபட்டாலும் மரணத்திரையின்பின் எப்போதும் இருப்பதாகவே எண்ணி ஆறுதலடையலாம். இத்தேசத்திலுள்ள அநேகர்க்கு மிஸ். பீடர்ஸன் அம்மாளே "ஒரு சிறந்த நல்ல தாய்."

* * * *

திருவண்ணுமலை நமது மிஷன் ஹைஸ்கூலில் இவ்வருஷம் S. S. L. C. பரீட்சையில் 100க்கு 55 வீதம் தேறியிருப்பதும், அதிகமான கிறிஸ்தவ மாணவர் வெற்றி பெற்றிருப்பதும், பாடசாலை தலைவர்களுக்கும் வேலைசெய்யும் ஆசிரியருக்கும் மன திருப்தியும் சந்தோஷமும் தரும். குறைந்த சம்பளத்தில் ஆசிரியர் வேலை செய்தபோதிலும் அவர்கள் திறமையும் முயற்சியும் குன்றுதது மிஷன் வேலைக்குச் சிறப்பே. கிறிஸ்தவ மாணவர் விடுதியில் பக்தியுடன் பிள்ளைகள் வளரவும், நல்லொழுக்கத்திலும் கல்வியிலும் தேர்ச்சி பெறவும் ஏற்பாடுகளை திருப்திகரமாய் எட்மாஸ்டர் ஸ்ரீ. R. தேவநேசன் அவர்கள் செய்துள்ளார். கிறிஸ்தவ மாணவருக்கு பள்ளிக்கூட பீஸ் குறைவாகவும், சாப்பாட்டுக்கு ரூ. 5 வீதமும் இருக்கிறது. வேறு மிஷன் சபை பிள்ளைகளுக்கும் இடமுண்டு.

* * * *

யுத்த செய்தி: கிரேக்க தேசம் முழுவதையும் ஜெர்மனி கைப்பற்றியபின், கிரேத்தா தீவை கைப்பற்ற வெகு முஸ்திப்பாய் படை யெடுத்தனர். கடல் மார்க்கமாய் படை போகாதபடி பிரிட்டிஷ் கப்பற்படை தடை செய்து வந்ததால், ஜெர்மானியர் தங்கள் வசமான கிரேக்கு கரையின் சமீபமான சுமார் 200 முதல் 90 மைல் தூரத்திலுள்ள 8 விமான விடுதிகளிலிருந்து, டைவ் பாம்பர், பாரச்சூட்டிஸ்ட்ஸ், கிளைடர், துருப்பு தூக்கிச் செல்லும் ஆகாயக் கப்பல் முதலிய விமானப் படைகளைக்கொண்டு சுமார் 3 வாரமாய் பலத்த யுத்தம் பிரிட்டிஷ் கிரேக்கு படைகளோடு நடத்தி, கடைசியில் பிரிட்டிஷார் பின் வாங்கும்படி செய்தனர். பிரிட்டிஷாருக்கு சரியான விமான நிலையங்களும் விமானங்களும் கிரேத்தா சண்டையில் கிடைக்காமற்போனதால் ஜெர்மன் பலம் அதிகமாகவே யிருந்தது. பிரிட்டிஷ் விமானங்கள் 300 மைல் தூரத்திலிருந்து வரவேண்டியதிருந்தது. கிரேத்தா சண்டையில் பிரிட்டிஷாருக்கு சுமார் 15 ஆயிரம் பேர் நஷ்டம்: ஜெர்மானியருக்கு 17 ஆயிரம் ஆளும், 430 விமானங்களும் நஷ்டமாம். கிரேத்தா யுத்தத்திலிருந்து பிரிட்டிஷ் நல்ல அநுபவம் அடைந்து, இனி விமானப்படையை



சரியான பலத்தில் வைக்கவேண்டுமென்று கற்றிருக்கிறார்கள். கிரேத்தா யுத்தம் நடக்காமலிருந்தால் எதிரி சிப்புரு தீவையும் லேசாய் பிடித்து, தீவிரமாய் சீரியா வழியாய் சேனையை நடத்தி இந்தியாவுக்கும் சமீபமாய் வந்திருக்கக்கூடும். இதைத் தடுத்து ஜெர்மன் முன்னேற்றம் இனி இராதபடி பிரிட்டிஷார் தகுந்த ஆயத்தம் செய்துவிட்டனர்.

சீரியா பிரதேசத்தில் ஜெர்மன் ஆக்ரமிப்பு மிஞ்சாதபடி கூடிய வரையில் முன் ஜாக்கிரதையாகவே பிரிட்டிஷ் படை முன்னேறி வருகிறது. மத்தியதரைக் கடலில் பிரிட்டிஷாருடைய ஆதிக்கமே யிருப்பதால், வட ஆப்பிரிக்காவின் லீபியா பிரதேச சண்டையில் பிரிட்டிஷ் ஜெயம் வளர்ந்துகொண்டே வருகிறது. சூயஸ் கால்வாய் நாளுக்கு நாள் அமெரிக்க உதவியுடன் பலப்படுத்தப்படுகிறது.

ஒரு வருஷத்திற்கு முன் பிரான்ஸ் விழுந்துபோனபோது, பிரிட்டனும் போய்விடும் என்று நினைத்தார்கள். இன்று வரையில் பிரிட்டன் தன்னுடைய ராஜயத்தில் 1 அடி கூட இழக்கவில்லை. ஆனால், இதாலியர்களுக்கு ஆப்பிரிக்காவில் சொந்தமான 700,000 சதுர மைல் தூரம், அதாவது பஞ்சாப் மாகாணத்தைப்போன்ற 7 மடங்கு விஸ்தீரண பாகத்தைப் பிடித்தது மன்றி இன்றுவரையில் 244,000 இத்தாலியப் போர் வீரரை சிறையாக்கியும், ஆயிரக்கணக்கில் பீரங்கிகளையும், டாங்குகளையும், இதர யுத்த தளவாடங்களையும் கைப்பற்றியிருக்கின்றனர்.

அமெரிக்க உதவி நாளுக்கு நாள் அதிகரிக்கிறது. விசேஷமாய், நூதன ராட்சச விமானங்களும் யுத்த கப்பல்களும் பிரிட்டிஷாருக்கு உதவி புரிகிறது. நாளடைவில் சண்டைக்கும் முன் வருவார்கள். இதன்றி, ருஷியாவுக்கும் ஜெர்மெனிக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டு போர் ஆரம்பித்துவிட்டது.

மேலும், யுத்தத்தில் வெற்றியடைவதற்கு வேண்டிய மூன்று—எண்ணெய், செம்பு, ரப்பர். உலகத்தில் உற்பத்தியாகும் எண்ணெயில் 70 சத விகிதமும், செம்பில் 85 சத விகிதமும், ரப்பரில் 91 சத விகிதமும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திடமே இருக்கின்றன. ஆகையால், ஜெர்மானியர் இறுதியில் தோற்கடிக்கப்படுவார்கள் என்று சந்தேகம் அற, உற்சாகத்தோடும் ஜெபத்தோடும் உதவி செய்ய முன் வரலாம். புது உலக அமைப்புக்கு புது மனதுள்ள மனுஷர்தான் வேண்டும். அழிவைக்கொண்டும் கடவுள் மனிதரை புதுப்பிக்கிறார். GNA. V.

———:———

## கிறிஸ்தவ நடத்தைக்குரிய சன்மார்க்க லட்சணங்கள்

### ii—சம உரிமை

கிறிஸ்துவின் சபை, அதின் தலைவரைப்போல் அடிமையென்றும் சுயாதீனனென்றும், யூதனென்றும் கிரேக்கனென்றும், விருத்தசேதனமுள்ளவன் விருத்தசேதனமில்லாதவன் என்றுமில்லையென்று அதிகமதிகமாய் கற்பிப்பதோடு, நாம் எல்லாரும் ஒரே சரீரத்தின் அவயவங்களைப்போல் ஒன்றாயிருக்கிறோம் என்று எடுத்துக் காட்டவேண்டும். இயேசு இதை தாமே தமது மாதிரியின் மூலம் காண்பித்தார். அவர் தீண்டப்படாத சமாரிய ஸ்திரீயினிடம் தண்ணீர் கேட்டும், தாழ்வாக எண்ணப்பட்ட ஆயக்காரனிடம் போஜனம் செய்தும், மோசேக்கும் மேலானவர் இயேசுதான் என்று சொன்னதினிமித்தம் விலக்கப்பட்ட பார்வையடைந்த குருடனைத் தேடியும் சென்றார். இவ்வித மனுஷரோடு மாத்திரமல்ல, மற்றுமுள்ள அந்தஸ்துள்ள மனுஷரான நீக்கோதேமு, அரிமத்தியா யோசேப்பு, ஜெப ஆலயத் தலைவர்களோடும் சிநேகமாயிருந்தார். ரோமச் சேனாபதி வேலையாளையும், கிரேக்க ஸ்திரீயின் மகளையும் குணமாக்கினார்.

நாம் அடிக்கடி உயர்குல ஜனம் இருக்கும் கிராமத்தை விட்டுவிட்டு அதிகம் நம்மை எதிர்க்காத சேரியாரிடம் போய் சுவிசேஷ வேலை செய்யப் போகிறோம். அப்படிச் செய்யாமல், நாம் முதலாவது ஊர்த்தெருக்களுக்குப்போய் அங்குள்ள சிலரையும் கூட்டிக்கொண்டு, பின்பு சேரிக்குள்போய் வேலை செய்தால், சமத்துவத்தை ஒத்து உழைப்பதில் நன்றாய்க் காட்டலாம். நம்முடைய படிப்பு, அந்தஸ்து, குடும்ப உயர்வு, முன்னேற்றம்—இவைகளினிமித்தம் நாம்தான் முதன்மையானவர்களென்று மற்றவர்களை கீழாக நினைக்கவும் நடத்தவும் சந்தர்ப்பங்கள் ஏற்படலாம். அப்போது சமத்துவத்தை ஜீவிய அனுஷ்டானத்தில் காட்ட தவறிப்போகிறோம். திருச்சபை தாழ்ந்த ஜாதியிலிருந்து மனிதரை மீட்கிறதென்று சொல்லிக்கொண்டே, படிக்கிற பிள்ளைகளுக்கு படிப்பு உதவிக்காகவோ அல்லது தாழ்ந்த வகுப்பினருக்கு ஒதுக்கப்பட்ட உத்தியோகம் பெறவோ, சில கிறிஸ்தவர்கள் தாங்கள் கீழான ஜாதியைச் சேர்ந்தவர்கள் என்று தங்கள் ஜாதி உரிமையைத் தேடுகிறார்கள். இது தவறே. சர்க்கார் உதவியும் ஜாதி வகுப்பு நிமித்தம் கொடுக்கப்படாமல், திறமையையோ அல்லது உண்மையான தேவையையோ பார்த்து கொடுக்கப்படுவதுதான் நியாயமென்று கிளர்ச்சி செய்வது நல்லது.



பிறருக்கு உபசரணை செய்வதிலோ அல்லது மரியாதை காட்டுவதிலோ, நாம் பிறரின் குல கோத்திரம், தோற்றம், செல்வாக்கு—இவைகளை மாத்திரம் நிதானித்து செய்யக்கூடாது. நம்மிடம் வேலைசெய்யும் வண்ணான், வீட்டு ஆட்கள், தோட்டக்காரன் முதலிய சிப்பந்திகளுக்கு குடியிருக்க சரியான வீடு, ஜீவனத்திற்கு வேண்டிய வரும்படி, அவர்களின் ஓய்வு நேரம், தகுந்தபடி இருக்கிறதா என்று கவனிப்பது நல்லது. ஒருவேளை இவர்களில் சிலர் நியாயத் தீர்ப்பு நாளில் கிறிஸ்தவர்களான நம்மைப் பார்த்து, "நான் உங்களுக்கு வண்ணானாக சேவைசெய்தேன், எனக்கோ போதுமான ஆகாரம் கொடுக்கவில்லை; பெருக்கி சுத்தம்செய்து வேலை செய்தேன், வஸ்திரம் கொடுக்கவில்லை; சமையல் வேலை செய்தேன், எனக்கோ மருந்து கொடுத்து வியாதி காலத்தில் பராமரிக்கவில்லை; சேவகனாகயிருந்தேன், என்னிடம் நட்புகொள்ளவில்லை—அகன்றுபோங்கள் என்று சொல்லலாம். திருச்சபை அற்ப சொற்ப பணியாட்களுக்கும் சகோதரத்துவத்தின் சுதந்தரம் கிடைக்கத்தக்கதாக பரிபாலிக்கவேண்டும்.

சுவிசேஷத்தைப் பரவச்செய்யும் உத்தரவாதமுடைய ஒவ்வொரு கிறிஸ்தவனும் உயர்வு தாழ்வு என்று ஜாதி வித்தியாசமின்றியும், ஆரியன் அல்லது திராவிடன் என்ற கோத்திர பேதமின்றியும், கீழ்தேசத்தார் மேல்தேசத்தார் என்ற பிரிவுமின்றி சுவிசேஷ தூதுவனாக செல்வது வருங்கால நிகழ்ச்சியில் எவ்வளவு முக்கியம்! யூத்தரை சிரேஷ்டராகக்கொள்ளும் ஜெர்மனி தேசமும், வெஸ்லி மஹானைப் பாராட்டும் இங்கிலாந்து தேசமும் கைகோர்த்தவர்களாக காணும் ஒரு காட்சி நமக்கு வேண்டுமே! சம உரிமை, சகோரத்துவம்—இதை நற்செய்தியாக உலகத்துக்கு இன்னும் பிரஸ்தாபிப்பது அவசியம்.

(தொடரும்) GNA. V.

---

## A Christian Residential School.

### தாசர் உயர்தரக் கல்விச்சாலை

தின்னனூர், தாசர்புரம் உயர்தரக் கல்விச்சாலை, ஜூன் மாதம் (1941) முதல் செக்கண்டரி மிடில் ஸ்கூலாக, கல்வி இலாகா அதிகாரிகளின் உத்தரவின்படி மாற்றப்பட்டு வருகிறது.

ஆகையால் பிள்ளைகள் இவ்விடத்திலேயே தங்கி 3வது பாரம் வரையில் படிக்க சகல சௌகரியங்களும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. லுத்தரன், ஆங்கில, மெதடிஸ்றசபைப் பிள்ளைகள் மாத்திரம் சேர்க்கப்படுவார்கள். வகுப்புகளுக்கேற்ற கல்வியோடு, நல் கிறிஸ்தவ குடும்பத்திற்கேற்ற பக்திமார்க்கத்தில் வளர்க்கப்படுவார்கள். தமிழ், ஆங்கில, சங்கீதப் பயிற்சியும் உண்டு: பிள்ளைகள் வியாதியின்றி நல்ல சுத்தமான ஜீவியம் செய்து, வளரக்கூடிய தகுந்த கிறிஸ்தவ நிலையம். இக்காலத்தில் அநேக பெற்றோர் உத்தியோகத் தொல்லைகளால் தங்களுடைய பிள்ளைகளைச் சிறுவயதில், சரியானபடி கவனித்து வளர்க்கமுடியாமையால், பிற்காலத்தில் பெரியவர்களாகும் போது, கிறிஸ்தவ விசுவாசத்தையிழந்து, பெற்றோருக்கும், மற்ற பெரியோருக்கும் கீழ்ப்படியாமல், உலக சிற்றின்பங்களில் சிக்கி, கிறிஸ்துவை மறுதலித்து வீணராகி, தங்களுக்கும், குடும்பங்களுக்கும், கிறிஸ்து சபைக்கும், உலகத்திற்கும் உபயோகமற்றவர்களாய், நிர்விசார வாழ்வு செய்ய நேரிட்டு, கிறிஸ்து குலத்தினருக்கு அபகீர்த்தியையும், அளவில்லாத தீமையையும் உண்டுபண்ணுகிறார்கள். ஆனால் சிறுவர் 7, 8 வயது முதல் 14, 15 வயது வரையில் தகுந்த ஒழுங்கின்படி நடத்தப்படுவார்களேயானால், அவர்களுடைய பின் ஜீவியம் குலத்திற்கும், சபைக்கும் மிகவும் உபயோகமுள்ளதாக இருக்கும். இதற்குத் துணையாகவே, நம்முடைய போர்டிங் கல்விச்சாலை (Residential School) ஏற்படுத்தியிருக்கிறோம்.

பெற்றோருடைய விருப்பத்தின்படி பிள்ளைகளுக்கு கூடிய வரை சௌகரியங்களும், கல்வி கற்பித்தலும் ஏற்பாடு செய்யப்படும். இவ்வருஷம் ஜூலை மாதம் பிள்ளைகள் சேர்க்கப்படுவார்கள். 14 வயதுக்கு மேற்பட்ட பிள்ளைகள் சேர்க்கப்படமாட்டார்கள். மாத செலவு போர்டிங்குக்கு ரூ. 5ம், வகுப்பிற்குத் தகுந்த மாத சம்பளமும் கட்டவேண்டும். மற்ற விபரங்களுக்கு பின் குறிப்பிட்ட விலாசத்திற்கு உடனே எழுதி தெரிந்து கொள்ளவேண்டும். H Devadoss B A, L.T., Manager, Dasar's Institute, Dasarpuram, Tinnanur R. S.

---

On Sunday the 10th August (7-50 a.m. to 8-15 a.m ) the All India Radio, Trichy, will broad cast our Lutheran Zion Church Service.

## மரண அறிக்கை

எங்கள் அருமைத் தகப்பனார் N. ஞானமுத்து பிள்ளை Evangelist, 40 வருஷ காலமாய் மிஷியோனில் சுவிசேஷகர் வேலை பார்த்து பென்ஷன் பெற்ற பின்பும் திருவாரூர் சபையில் சுவிசேஷகராகரும், உபதேசியாராகவும். சென்ற 20 வருஷ காலமாக ஆண்டவருடைய ஊழியத்தை ஊக்கத்துடன் நடத்தி வந்தார்கள். நாளது ௵ எப்ரல்மீ 24உ திடீரென்று வியாதிப்பட்டு மேமீ வியாழக்கிழமை 8உ பிற்பகல் 2 மணிக்கு கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரை அடைந்தார்கள். அ[illegible]து சடலம் மறுநாள் மாலை 5 மணிக்கு ஆலயத்துக்குகொண்டுவரப்பட்டு ஆராதனைக்குப் பிறகு லுத்தரன் மிஷியோன் கல்லறைத் தோட்டத்தில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று சங். சாமுவேல் பாக்கியம் ஐயாவர்களால் நல்லடக்கம் செய்யப்பட்டது. வயது 70.

"கர்த்தருக்குள் மரிக்கிறவர்கள் இது முதல் பாக்கியவான்கள் என்றெழுது. அவர்கள் தங்கள் பிரயாசங்களை விட்டொழிந்து இளைப்பாறுவார்கள். அவர்களுடைய கிரியைகள் அவர்களோடே கூடப்போம். ஆவியானவரும் ஆம் என்று திருவுளம் பற்றுகிறார் என்று சொல்லிற்று." வெளி 14 : 13.

G. K. CHINNAPPAN. G. D. SAMATHANAM AMMAL.
G. RETNAM. G. D. E. MUTHUMANI AMMAL.
G. GNANABARNAM AMMAL. G. D. DAVID.

திருவாரூர், 1-6-41.

---

## பரம இளைப்பாறுதல்

எனது அருமைத் தகப்பனாரும் மாஜி P. D. ஜோசப் பிள்ளையின் குமாரருமான J. சாலமோன் பிள்ளை அவர்கள் சில நாட்களாய் வியாதியாயிருந்து 1941-ம் வருஷம் மே மாதம் 25-ம் தேதி ஞாயிறு பிற்பகல் 5-45 மணிக்கு தன்னுடைய மனைவி மக்களுடன் கடைசி நேர மட்டும் பேசிக்கொண்டிருந்து அன்றைய பிரசங்க வாக்கியத்தையும் அதன் பொருளையும், பிரார்த்தனைகளையும் சொல்லக் கேட்டு நல்லாயத்தத்துடன் அமைதலாய் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். அவருடைய சடலம் அடுத்த நாள் தஞ்சை லுத்தரன் உத்தான தோட்டத்தில் சகல கிறிஸ்தவ மரியாதையுடன் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று க்ஷேமிக்கப்பட்டது.

பிரிந்துபோய் கிறிஸ்துவுடனே இருக்க எனக்கு ஆசையாயிருக்கிறது. பிலிப்பியர். 1 : 22.

S. J. LORENZ, Dharapuram. S. DEVADASS, Manora.

Registered No. M. 1979



மரண அறிக்கை

அநேக வருஷங்களாய் லுத்: மிசியோனில் உபதேசியாராக தேவ ஊழியம் செய்து சில வருஷங்களாய் பென்ஷன் பெற்று வந்த எனது அருமைத் தகப்பனரும் தரங்கை மாஜி தேவசகாயம் பிள்ளையின் மூத்த குமாரருமாகிய கனம் D. தியாபிலஸ் இரத்தினசாமி பிள்ளை அவர்கள் கடந்த சில மாதங்களாக திருப்பூரில், பாரிச வாயுவினல் பீடிக்கப்பட்டு சற்று சுகமானபின் புதுக்கோட்டையிலிருக்கும் தன் கடைசி மகளும் மருமகனுமாகிய R. S. தேவானுக்கிரகம் பிரசங்கியாரிடம் போய் 1 மாத காலம் சுகமாயிருந்து பிறகும் மேற்படி வியாதியினலேயே பீடிக்கப்பட்டு சென்ற ஏப்பிரல் மாதம் 28-ம் தேதி திங்கள்கிழமை பகல் 1-30 மணிக்கு நல்லாயத்தத்தோடு கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரை அடைந்தார்கள். அவர்களது சடலம் மறுநாள் 29-ம் தேதி செவ்வாய்க்கிழமை பகல் 1 மணிக்குச் சகல கிறிஸ்தவ மரியாதையுடன் புதுக்கோட்டை லுத்தரன் மிஷன் உத்தான தோட்டத்தில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது. வயது 78.

மரித்த உம்முடையவர்கள் பிரேதமான என்னுடையவர்களோடே கூட எழுந்திருப்பார்கள் ஏசா. 26 : 19 அப்போது நான் என் மாமிசத்திலிருந்து பாராபரனைப் பார்ப்பேன்

யோபு 10 : 26.

| | |
|---|---|
| 20—5—41, ஈரோடு. | T. C. DEVAKANNU, *Ry. Coloney Erode.* |

